3rd April 1958] [Sri K. Anbazhagan]

விலுள்ள நிபுணர் இதைப்பற்றி ஆராய்ந்து சொல்வதாகவும், அதற்கு வேண்டிய உதவியும் செய்கிறோம் என்று சொல்லியும் இருக்கிறார்கள். அந்த இறையிலும் அதை எடுத்து நிறைவேற்றாமல் விட்டு விட்டதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri R. VENKATARAMAN:** ரஷ்யாவினுடைய அபிப்பிராயம் ஒன்றும் என்னிடத்தில் இல்லை. நெய்வேலி நிலக்கரி சம்பந்தமாக அதன் முடிவு கிடைத்த பிறகுதான் அதை உருவாக்க முடியும். லோ பர்னேஸ் ஷாப்ட் ஸ்கீம் இப்பொழுது நடந்து கொண்டிருக்கிறது. அதன் முடிவு தெரிய வேண்டியதாக இருக்கிறது. அந்த முறை வெற்றிகரமாக முடியும் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. பழுப்பு நிலக்கரி சம்பந்தமாக ஜெம்ஷெட்பூரில் விசாரணை நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. அதன் முடிவும் தெரிய வேண்டியதாக இருக்கிறது. ஜெர்மனியிலும் விசாரணை நடந்து கொண்டிருக்கிறது. அது வெற்றிகரமாக இருக்கும் என்ற நம்பிக்கையுடன் இருக்கிறேன்.

DEPUTY SPEAKER : Is Mr. Kalyanasundaram pressing his cut motion?

SRI M. KALYANASUNDARAM : Yes, Sir.

DEPUTY SPEAKER : I shall then put it to vote. The question is—

"That the allotment of Rs. 5,00,42,300 under Demand XXI —Industries and Cinchona—be reduced by Rs. 100."

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : I shall put the Demand to vote. The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 5,00,42,300 under Demand XXI—Industries and Cinchona."

The Demand was put and carried and the grant was made.

DEPUTY SPEAKER : The House will now rise for lunch and meet again at 3-30 p.m. 1–31 p.m.

The House then rose for lunch.

**(After Lunch—3-32 p.m.)**

IV.—GOVERNMENT BILLS—*cont.*

(2) THE MADRAS MATERNITY BENEFIT (AMENDMENT) BILL, 1958 (L.C. BILL 1 OF 1958).

**The Hon. Sri R. VENKATARAMAN :** இந்த மசோதாவில் வருகிற 'மிஸ்காரியேஜ்' போன்ற சில வார்த்தைகளுக்கு எனக்கு சரியாக தமிழ் தெரியாது. ஆகையால் ஆங்கிலத்தில் பேசலாம் என நினைக்கிறேன்.

MR. SPEAKER : It will take more time for others to follow and understand it. If you find it difficult, my difficulty is magnified.

[3rd April 1958

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, I move—

"That the Madras Maternity Benefit (Amendment) Bill, * 1958 (L.C. Bill No. 1 of 1958), as passed by the Legislative Council, be taken into consideration".

The Madras Maternity Benefit Act, 1934, regulates the grant of maternity benefits to women workers in factories. Maternity benefit is paid at the rate of eight annas per day for the actual number of days of absence immediately preceding and following the confinement, subject to a maximum period of seven weeks. Separate provisions for maternity benefits for plantation women workers are made in the Madras Plantation Labour Rules.

The question of providing maternity benefit on an uniform scale throughout India and enacting special legislation for the purpose was discussed by a Committee of the Indian Labour Conference in January 1954. It was suggested that the Government of India might draw up minimum standards of maternity benefits and recommend them to the State Government for adoption either by enacting fresh legislation or by suitably amending the existing laws to the extent necessary. The above suggestion was accepted by the Government of India. Accordingly draft model minimum standards for maternity benefits were drawn up. The model standards were finalised after obtaining the opinion of the State Governments. The Government of India have suggested that the above recommendations may be implemented, either by enacting fresh legislation or by suitably amending the existing Act. Hence, the Bill to amend the Madras Maternity Benefits Act, 1934, has been brought before the House for consideration.

The principal changes made in the Bill are as follows :—

The Act is extended to such industrial establishments as the State Government may from time to time by notification specify. The Act at present applies to all the factories and it is now intended to be extended to Industrial Establishments which the State Government may from time to time notify. The most important change is that the rate of maternity benefit is increased from eight annas a day to 75 np. per day or 7/12th of the average daily wage, whichever is higher. The maximum period for which maternity benefit is payable has also been increased from 7 weeks to 12 weeks. In addition, the following other benefits are provided :

Hitherto no provision was made in regard to pre-natal and post-natal treatment. The Bill provides for lump-sum medical bonus of Rs. 10, except in cases where pre-natal and post-natal care are provided free of charge. The period of prohibition of employment following confinement has been increased from four to six weeks. Provision is made for leave with full wages for a period of

* Published in the *Fort St. George Gazette*, Extraordinary dated 15th February 1958, and passed by the Legislative Council at its meeting dated 8—3—1958.

3rd April 1958] [Sri R. Venkataraman]

three weeks in case of miscarriages. Provision has also been made for leave on account of illness due to pregnancy, confinement or premature birth of a child up to a maximum period of one month. The Bill provides for nursing breaks of 15 minutes for nursing mothers after a continuous period of work for three hours. Opportunity has also been taken to specify the mode of recovery of the benefits payable under the Act and for the appointment of inspectors for the enforcement of the provisions of this Act.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Maternity Benefit (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 1 of 1958), as passed by the Legislative Council be taken into consideration."

SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மெடர்னீடி பெனிபிட் சட்டத்தை திருத்துவதற்கான மசோதாவை கொண்டு வந்திருக்கக்கூடிய இந்த சந்தர்ப்பத்தில், அதற்காக வேண்டி தொழில் அமைச்சர் அவர்களை நான் பாராட்டாமல் இருக்க முடியாது. அதே நேரத்தில் இதில் இருக்கக்கூடிய சில குறைபாடுகளை எடுத்துச் சொல்லாமலும் இருக்க முடியாது. "அரிது அரிது மானிடராய் பிறப்பது அரிது" என்று பல பெரிய யோகிகள் பாடி வைத்திருக்கிறார்கள். அப்பேற்பட்ட மனித சமுதாய அபிவிருத்திக்கு காரணஸ்தர்களாக இருக்கக் கூடிய பெண்கள், தாய் குலத்தைச் சேர்ந்தவர்கள், அடக்கப்பட்டு, ஒதுக்கப் பட்டு பல இடங்களில் அடிமைகளாகக் கூட இருக்கக்கூடிய நிலைமை இருக் கிறது. இம்மாதிரி சந்தர்ப்பத்தில்தான் "விமன் வெல்பெயர் சென்டர்ஸ்" போன்றவைகளை அமைத்து, அதற்கு வேண்டி லட்சக்கணக்கான ரூபாய்களை ஒதுக்கி, அவர்களின் முன்னேற்றத்திற்காக வேண்டி பல விதத்திலே இன்றைய தினம் அரசாங்கம் வேலை செய்துவருகிறது என்பது நமக்குத் தெரிந்த விஷயம். அமைச்சர் அவர்கள் "இதோ பாருங்கள், பெண் களுக்கு நாங்கள் எவ்வளவு உரிமை கொடுத்திருக்கிறோம், அவர்கள் 10, 12 பேர்கள் சட்டசபையில் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு போதுமான உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது" என்று சொல்லலாம். அதை நாம் வரவேற்கிறோம். சட்டசபை உறுப்பினர்களாக இருக்கக்கூடிய பெண்கள் இந்த மசோதாவின் பேரிலே எந்த அளவுக்கு வாதாடப்போகிறார் கள், போராடப்போகிறார்கள் அவர்களுடைய இனத்தைச் சேர்ந்தவர் களுடைய உரிமைகளுக்காக வேண்டி, இந்த மசோதாவின் விவாதத்திலே அவர்கள் கலந்து கொள்ளப்போகிறார்களா, இல்லையா என்பதையும் பார்க் கப்போகிறோம்.

இந்த மசோதாவிலே பெண் தொழிலாளர்களுக்கு மெடர்னிடி பெனி பிட்டாக 12 வாரங்களுக்கு சம்பளத்துடன் லீவு என்று சொல்லப்பட்டிருக் கிறது. ஆனால் நாள் ஒன்றுக்கு 12 அணா சம்பளம் என்று கண்டிருப்பதை நான் குறிப்பிட ஆசைப்படுகிறேன். இப்பொழுது தொழிற்சாலைகளில் வேலை செய்துகொண்டிருக்கும் தொழிலாளர்கள் அவர்களுடைய வாழ்க்கைத் தரத் திற்கு ஏற்றபடி சம்பளம் போதவில்லை என்ற காரணத்திற்காக வேண்டி, சம்பள உயர்வு வேண்டும் என்று ஒரு பக்கத்திலே போராடிக் கொண்டிருக் கிறார்கள் என்பது நமக்கு தெரிந்த விஷயம். இந்த சந்தர்ப்பத்திலே பெண்களின் பிரசவ காலத்தில் அவர்களுககு கொடுக்கக்கூடிய லீவு சம்பளம் மூன்று மாதத்திற்கு நாள் ஒன்றுக்கு 12 அணா என்றால், இன்றைக்கு அவர்கள் தொழிற்சாலையில் ஒரு மாதத்திற்கு வாங்கும் சம்பளம் கூட கிடையாது. பிரசவ காலத்தில்தான் அவர்களுக்கு செலவு அதிகமாக ஆகும் என்பது சபாநாயகர் அவர்கள் டாக்டராக இருப்பதால், அவருக்கும் தெரிந்த விஷயம். ஆகவே இதற்காக வேண்டி அவரும்கூட பரிந்து பேசுவார், இதை ஒப்புக்கொள்ளுவார் என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

MR. SPEAKER : அங்கத்தினர்களுக்கு தெரியவேண்டும்: சபாநாய கருக்கு தெரியவேண்டிய அவசியமில்லை.

**Sri V. K. KOTHANDARAMAN:** டாக்டர் என்ற முறையில் சொன்னேனே தவிர, சபாநாயகர் என்ற முறையில் அல்ல.

**Mr. SPEAKER:** ஆனால் நான் வாதாட முடியாதே ?

3–46 p.m. **Sri V. K. KOTHANDARAMAN:** மூன்று மாதங்களுக்கு அவர்களுக்கு தினம் ஒன்றுக்கு 12 அணா கொடுப்பதற்கு பதிலாக எந்த அளவிற்கு அவர்கள் சம்பளமும் பஞ்சப்படியையும் சேர்த்து வாங்குகிறார்களோ, அந்த சம்பளத்தை அப்படியே கொடுக்கவேண்டும். கஷ்டமான பிரசவ காலத்திலே அதிகப்படியான செலவு இருக்கக்கூடிய காலத்திலே மேலும் அதிகப்படியாக அவர்களுக்கு இரட்டிப்பான சம்பளம் கொடுக்கவில்லை என்று சொன்னாலும், அந்தக் காலத்தில் அவர்கள் பெறக்கூடிய சம்பளம் முழுவதையும் கொடுப்பதன் மூலம்தான் அவர்களுக்கு உண்மையான உதவி அளிக்க முடியும். அந்த நேரத்திலே அவர்கள் நல்ல உணவு சாப்பிடுவதன் மூலமாகத்தான் அவர்களுக்கு பிறக்கக்கூடிய குழந்தைகளும் நல்ல திடகாத்திரர்களாக இருக்க முடியும். அப்படியின்றி உடல் நலம் குன்றியிருக்குமேயானால், அவர்களுக்கு பிறக்கும் குழந்தைகளும் தேவாங்குகளாகத்தான், பலஹீனர்களாகத்தான், இருக்கும். ஆகவே தயவு செய்து, அவர்கள் எவ்வளவு சம்பளம் பஞ்சப்படி வாங்குகிறார்களோ அவ்வளவு ரூபாய்க்கு இந்தத் தொகையை உயர்த்த வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். கனம் அமைச்சர் "இப்போது 8 அணா தானே கொடுக்கப்படுகிறது ? பன்னிரண்டு அணாவிற்கு நாங்கள் உயர்த்தியிருக்கிறோமே!" என்று ஒரு வேளை சொல்லலாம். பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பே தென்னிந்திய மில்ஸ் அஸோஷியேஷன் சார்பில் கொடுக்கப்பட்ட தீர்மானத்திற்கு இணங்க இந்த லீவ் காலத்தில் நாள் ஒன்றுக்கு ரூ. 1-11-6 சம்பளம் சில மில்களில் கொடுக்கப்படுகிறது. மேலும் கோயமுத்தூர், மதுரை போன்ற இடங்களில் இன்ஷூரன்ஸ் திட்டம் இருப்பதால், அங்குள்ள தொழிலாளர்களுக்கு இந்த லீவ் காலத்தில் இப்போது அதிகமான சம்பளம் கொடுக்கப்படுகிறது. மேலும், அங்கெல்லாம் நகரசுத்தித் தொழிலாளர்கள் போன்றவர்களுக்கு முழுச் சம்பளத்துடன் மெடர்னிடி லீவ் கொடுக்கப்படுகிறது. ஆகவே சட்டத்திற்குத் திருத்தம் செய்யும் இந்த வேளையில் இந்தத் தொகையை முழுச் சம்பளமாக ஆக்கினோமேயானால்தான் நாம் தாய்க் குலத்திற்கு நன்மை செய்தவர்கள் ஆவோம். கனம் அமைச்சர் "8 அணாவாக இந்த தொகையை நிர்ணயித்திருக்கும்போதே பெண்களை வேலைக்கு அமர்த்திக் கொள்வதற்கு முதலாளிகள் தயங்குகிறார்கள். அவர்கள் மிகக் குறைவான பெண்களையே வேலைக்கு அமர்த்திக்கொள்கிறார்கள். இந்தத் தொகையை உயர்த்தினால் பெண்களை அவர்கள் வேலைக்கு அமர்த்திக்கொள்ளவே மாட்டார்கள்." என்று சொல்லக்கூடும். நான் சொல்கிறேன். "இதே மசோதாவில் ஒவ்வொரு தொழிற்சாலையிலும் கண்டிப்பாக குறைந்த பட்சம் 25 சத விகிதம் ஸ்தானங்களுக்கு பெண்களை வேலைக்கு அமர்த்திக்கொள்ள வேண்டுமென்று விதி வகுக்கவேண்டும். அவ்வாறு செய்தால்தான் முதலாளிகள் பெண்களை வேலையிலிருந்து நீக்கமாட்டார்கள்: பெண் தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொள்வார்கள்." ஆகவே இப்படிப்பட்ட ஒரு திருத்தத்தையும் மசோதாவில் சேர்க்க வேண்டும். மேலும் லீவ் காலம் மசோதாவில் எவ்வாறு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது ? பிரசவ காலத்திற்கு முன்பு 6 வாரங்களும் பின்பு 6 வாரங்களும் லீவ் கொடுக்க வேண்டுமென்று மசோதாவில் கூறப்பட்டிருக்கிறது. இந்தக் காலத்தில் லீவ் எடுத்தால் ஊதியம் மிகவும் குறையும் என்பதால் பிரசவ தினத்திற்கு மிக சமீப தினம் வரையில் பெண் தொழிலாளர்கள் வேலை செய்யும் நிலைமை ஏற்படக்கூடும். ஆகவே அவர்கள் சாதாரணமாக எவ்வளவு சம்பளம் வாங்குகிறார்களோ அவ்வளவு பணத்தை லீவ் காலத்திலும் சம்பளமாக கொடுக்க வேண்டும். 'அபார்ஷன்' ஏற்பட்டாலோ, 6—7 மாதங்களில் பிரசவமாகிவிட்டாலோ, அப்போது கொடுக்கப்பட வேண்டிய லீவ் காலம் மூன்று வாரங்களாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அபார்ஷன்தான் மிகவும் கஷ்டத்தைக் கொடுப்பது. அபார்ஷன் ஏற்பட்டவர்களுக்குத் தான் ஜன்னி பிடித்து விடக்கூடிய அபாயங்கள் இருக்கின்றன. இதை நாம் பலயிடங்களில்

பார்க்கிறோம். அவர்கள் பல விதத்தில் நோய் வாய்ப்படுகிறார்கள். ஆகவே அவர்களுக்கும் 12 வார லீவ் கொடுக்க வேண்டுமென்று விதிக்க வேண்டும். பிரசவ கால லீவ் காலத்தில் எல்லாப் பெண்களுக்கும் அபார்ஷனாக இருந்தாலும் சரி, நல்ல பிரசவமாக இருந்தாலும் சரி, முழுச் சம்பளம் கொடுக்க வேண்டும். பிரசவ காலத்திற்கு முன்பு 6 வாரங்களும் பின்பு 6 வாரங்களும் என்று லீவ் நிர்ணயிக்கப்பட்டிருப்பதுடன், அது பல நிபந்தனைகளுக்கும் உட்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த நிபந்தனைகளை நீக்க 3-46 p.m. வேண்டும். எந்த விதமான பிரசவமானாலும் 12 வார லீவ் கொடுத்துவிட வேண்டுமென்று விதிக்கவேண்டும். மேலும் அலவன்ஸை முழு அலவன்ஸாக கொடுக்க வேண்டும்; 10 ரூபாய் கொடுக்க வேண்டும். இந்த மசோதாவை இன்னும் நன்றாகப் பரிசீலித்து நல்ல திருத்தங்களை இதற்குக் கொண்டு வருவதற்காக இதை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பினால் மிகவும் நன்றாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Sri K. Sattanatha Karayalar has given notice of an amendment. Is the hon. Member pressing his amendment? If so, I have no objection.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I am moving the amendment. I beg to move—

"That the Madras Maternity Benefit (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 1 of 1958) be referred to a Select Committee".

SRI M. JAGANNATHAN : I second it, Sir.

**MR. SPEAKER : Motion moved—**

"That the Madras Maternity Benefit (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 1 of 1958) be referred to a Select Committee."

The motion and the amendment are before the House for discussion.

**SRI T. S. RAMASWAMY PILLAI** :கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கும் கனம் தொழில் அமைச்சரை பாராட்டுகிறேன். இந்த மசோதாவின் வருகை ரொம்ப காலமாகவே எதிர் பார்க்கப்பட்டு வந்தது. பல தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழி லாளர்கள் பலவிதமாக நடத்தப்பட்டு வருகிறார்கள். தொழிலாளர்களின் பிரச்னைகளை நன்குணர்ந்திருக்கும் கனம் தொழில் அமைச்சர் மசோதாவை நன்றாகத் தயாரித்திருக்கிறார்கள். இந்தியா முழுவதிலும் எல்லா இடங் களிலும் பெண் தொழிலாளர்களுக்கு இன்றியமையாத தேவைகளாக இருக்கும் சில சௌகரியங்களை கொடுக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்ட கனம் அமைச்சர் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருப்பதை நான் பாராட்டுகிறேன். இந்தியாவிலேயே தொழிலாளர்களுக்கு தலைமை தாங்கி தொழிலாளர்களின் இயக்கங்களைத் திறம்பட நடத்தியிருக்கும் கனம் அமைச்சர் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருப்பது குறித்து மிகவும் பெருமைப்படுகிறோம். இந்த மசோதாவைப் பரிசீலிக்கும்போது, மெடர் னிடி லீவ் காலம் நிர்ணயிப்பதைப் பொறுத்தவரையில் அரசாங்கத்தார் கொஞ்சம் தாராளமாக இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. லீவ் காலத்தில் கொடுக்கப்படவேண்டிய சம்பளத்தை நிர்ணயிக்கும் விஷ யத்திலும் கொஞ்சம் தார்ாளமாக இருந்திருக்கலாம். அந்தத் தொகையை 75 நயா பைசாவாக அரசாங்கத்தார் நிர்ணயித்திருக்கிறார்கள். இதை ஒரு ரூபாயாக ஏன் நிர்ணயிக்கக்கூடாது என்று கேட்க விரும்பு கிறேன். எனக்கு முன் பேசிய ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் கூட, இப் போது சில மில்களில் இது ஒரு ரூபாய்க்கும் அதிகமாகக் கொடுக்கப்படுவதாகத்

தெரிவித்தார்கள். அப்படி இருக்கும்போது, இதை ஒரு ரூபாயாக என் நிர்ணயிக்கக்கூடாது ? இதை ஒரு ரூபாயாக நிர்ணயிக்கவேண்டும். மேலும் பெண் தொழிலாளர்கள் மற்ற நாட்களில் தினசரி எவ்வளவு சம்பளம் வாங்குகிறார்களோ அந்தச் சம்பளத்தையே பிரசவ லீவ் காலத் திலும் கொடுக்க வேண்டுமென்று நிர்ணயிக்க வேண்டும். பிரசவத்திற்குப் பிறகும், 'மிஸ்காரியேஜ்'-க்குப் பிறகும் குறைந்தபட்சம் 45 நாட்களுககு லீவ் கொடுக்க வேண்டும். மேலும், பிரசவத்தில் இறந்துவிட்டால் அநதத் தொழிலாளிக்கு, அவள் உயிருடன் இருந்த நாள் வரைக்கும்தான் சலு கைகள் கொடுக்கப்படும். இந்தச் சலுகைகள் சாதாரணமான சந்தர்ப்பங் களில் உயர்ந்த பட்சமாக எவ்வளவு கொடுக்கப்பட வேண்டுமோ, அவ் வளவே இறந்துவிட்ட போதும் கொடுக்கப்பட வேண்டுமென்று விதிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். எங்களுக்கு ஒரு நம்பிக்கை இருக்கிறது. அதாவது, தொழிலாளர்களின் நலன்களுக்கு அனுகுண மாக இருப்பதில், கனம் அமைச்சர் எங்களைவிட பின்தங்கியவர் அல்ல என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. கனம் அமைச்சர் "நாங்கள் சில திருத்தங்கள் கொண்டு வருகிறோம். சில திருத்தங்களை நீங்கள் கொண்டு வருவதற்கும் இடம் கொடுக்கவேண்டாமா ? ஆகவேதான் அவைகளை நாங்கள் விட்டு வைத்திருக்கிறோம்" என்று சொல்வது வழக்கம். நான் இப்போது கோரிய திருத்தங்களையும் கனம் அமைச்சர் அதே மாதிரி பாவிப்பார் என்று நம்புகிறேன். பிரசவ காலத்தில் கொடுக்கப்பட வேண்டிய லீவ் காலத்தையும் லீவ் கால சம்பளத்தையும் அதிகரிக்க வேண்டும். எல்லாத் தொழில்களுக்கும் இந்தச் சட்டத்தை விஸ்தரிக்க வேண்டும். இந்தியா முழுவ திலும் இந்தச் சலுகைகள் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும். இந்தச் சலுகைகளை தொழிலாளர்களுக்கு கொடுக்க வேண்டுமென்று விதிக்கும் விஷயத்தில், சில தொழிற்சாலைகளை ஒரு விதமாகவும் மற்ற தொழிற்சாலை களை வேறுவிதமாகவும் சர்க்கார் நடத்தக் கூடாது. எந்தத் தொழிற் சாலைக்கும் விதிவிலக்கு அளிக்கக்கூடாது. இந்த ராஜ்யத்தில் எல்லாத் தொழிற்சாலைகளிலும் இந்தச் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவர வேண்டு மென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

3-50 p.m. இதிலே ஒன்றே ஒன்று மட்டிலும் நாம் கவனிக்க வேண்டும். இந்த சௌகரியங்களைக் கொடுப்பதால் ஒருவேளை முதலாளிகள் பெண் தொழி லாளிகளை வேலைக்கு எடுத்துக் கொள்ளமாட்டார்களோ என்ற பயம் இருப் பதாக மெம்பர் ஒருவர் குறிப்பிட்டதை நான் மீண்டும் குறிப்பிட விரும்பு கிறேன். பஞ்சாலையில் வேலை செய்யும்போது ஒரு சில பிரிவுகளிலே நிச்சயமாக ஆண் தொழிலாளிகளைவிட பெண் தொழிலாளிகள் அதிகமாக வேலை செய்ய முடியும். ஆகையால், நிச்சயமாக பெண் தொழிலாளி களுக்குக் கொடுக்கக்கூடிய வேலை எந்த அளவும் பாதிக்கப்படாது என்ற கருத்தைப் பரிசீலனை செய்யவேண்டும். அதுபற்றிய திருத்தங்கள் வரும் போது அவற்றை அனுதாபக் கண்களோடு நிச்சயமாக தொழில் அமைச்சர் அவர்கள் பார்ப்பார்கள் என்றும், அனுகுணமான முறையில் திருத்தத்தை ஏற்றுக் கொள்வார்கள் என்ற நம்பிக்கையோடும் என்னுடைய வார்த்தை தையை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI J. MATHA GOWDER** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவைக் கொண்டு வந்த தொழிலமைச்சரை நான் மிகவும் பாராட்டு கிறேன். அதே நேரத்தில் ஒன்றை மாத்திரம் குறிப்பிட விரும்புகிறேன். இதிலே பிரசவத்திற்கு முன்பும் பிரசவத்திற்குப் பின்பும் இவ்வளவு வாரம்தான் அவர்களுக்கு விடுமுறை கிடைக்குமென்று வரையறுக்கப்பட் டிருக்கிறது. அனுபவ ரீதியில் ப்ளாண்டேஷன் லேபரிடத்திலே நான் பார்த்திருக்கிறேன். தொழிலாளத் தாய்மார்களுக்கு பிரசவம் எப்பொழுது ஏற்படும் என்று அவர்களுக்குத் தெரியாது. பாக்டரிகளிலோ அல்லது வேறு துறையிலோ இருக்கக்கூடிய முதலாளிகள் சொந்தமாக டாக்டர்கள் ஏற்படுத்தி யிருப்பார்கள். பிரசவம் எப்பொழுது, எந்த மாதத் தில் ஏற்படக்கூடும் என்று அந்த டாக்டர்களும் கூட நிச்சயமாகச் சொல்வ தில்லை. பத்தாவது மாதம் எப்பொழுது வருகிறது என்று தெரியாத நிலையில், அவர்கள் எட்டு, ஒன்பது மாதம் என்று நினைத்துக்கொண்

டிருந்து வேலைக்குப் போய்க்கொண்டிருப்பார்கள். சாதாரணமாக வேலைக்குப் போய்க் கொண்டிருக்கும் போதுகூட அவர்களுக்கு பிரசவம் ஏற்பட்டு விடுகிறது. இதனால் பிரசவத்திற்கு முன்பு அவர்களுக்குக் கொடுக்கப்படக் கூடிய விடுமுறை முதலியவைகள் அவர்களுக்கு மறுத்துவிடுகிறார்கள். பிரசவத்திற்கு பிறகு நான்கு வாரங்களுக்கு மாத்திரம் அலவன்ஸ் கொடுக்கிறார்கள். ஆகையால், அந்த விதமாக நாம் 12 வாரங்களுக்கு அலவன்ஸ் கொடுக்கவேண்டுமென்று சட்டம் இயற்றும்போது, முன்பு 'பின்பு' என்று வித்தியாசம் பாராட்டுவது அவ்வளவு பொருத்தம் இல்லாமல் இருக்கிறது. நான் அனுபவபூர்வமாகச் சொல்கிறேன். தோட்டத் தொழிலாளிகள் இருக்கிறார்கள். எப்பொழுதுதான் குழந்தை பிறக்கும் என்று அவர்களுக்கே தெரியாத நிலையில் வேலை செய்துகொண்டேயிருந்து, இரண்டு, மூன்று நாட்களுக்குள்ளேயே பிரசவம் செய்துவிடுகிறார்கள். முதலில் இருக்கும் பிரசவ அலவன்ஸ் கிடைப்பதில்லை. பிற்பாடு கிடைக்கிறது. மெடிகல் சர்டிபிகேட் வாங்கவில்லை என்பதனால் டாக்டரிடத்தில் காண்பிக்கப் படுகிறார்கள், இப்படியெல்லாம் தகராறு செய்கிறார்கள். பிரசவத்திற்கு முன்னால் அவர்கள் டாக்டரிடத்தில் அடிக்கடி போய்ச் சொல்வது இல்லை. 'எனக்கு எத்தனை மாதம் ஆயிருக்கிறது?' என்று டாக்டரிடம் போய் வெளிப்படையாகக் கேட்பதற்கு கூச்சப்பட்டுக் கொண்டு, அவர்கள் மறைத்து விடுகிறார்கள். பிரவசவத்திற்குப் பிறகு அவர்கள் மெட்டர்னிடி பெனிபிட் கேட்கும்போது முதலாளிகள் தகராறு செய்கிறார்கள். ஆகவே, 12 வாரம் என்றால், பிரசவம் ஆவதற்கு முன்பும் பின்பும் என்பதை மாற்றி 12 வாரங்கள் பிரசவ அலவன்ஸ் கொடுப்பதற்கு நிச்சயமாக உத்தரவு போட வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். இதனால் சிக்கல் அதிகமாக ஏற்பட்டுக் கொண்டு போகிறது. முதலாளிகளுடைய டாக்டரிடத்தில் போய் சர்டிபிகேட் வாங்க வேண்டுமென்று இருப்பதால், அது கடினமான காரியமாக இருக்கிறது.

இதிலே ஒன்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. பிரசவம் ஏற்பட்ட பிறகு அவர்களுக்கு உடம்பு சௌகரியம் இல்லையென்றால் மூன்று வார விடுமுறை அவர்களுக்கு கூலியோடு கொடுக்கிறார்கள். உடம்பு சுகம் இல்லாமல் இருந்ததென்று அவர்கள் 'ப்ரூப்' காண்பிக்க வேண்டும். அதற்காக அவர்கள் மெடிகல் சர்டிபிகேட் 'ப்ரட்யூஸ்! செய்து 'ப்ரூவ்' செய்ய வேண்டி யிருக்கிறது. அந்த மெடிகல் சர்டிபிகேட்டை யாரிடம் வாங்க வேண்டுமென்றால் முதலாளிகள் நியமித்திருக்கும் டாக்டரிடத்தில் வாங்க வேண்டும். அதற்காக அவர்களிடம் தொழிலாளிகள் போய்க் கேட்கும் போது அவர்கள் நிச்சயமாக அப்படிப்பட்ட சர்டிபிகேட்கள் தருவதே இல்லை. பிரசவத்திற்குப் பிறகு கூட, அதாவது பிரசவம் ஆனவுடனே கூட, தேகம் சரியாக இருக்கிறதென்று சர்டிபிகேட் கொடுக்கிறார்களே தவிர, 'உடம்பு சரி இல்லை' என்று சர்டிபிகேட் கொடுப்பதில்லை. 'உடம்பு சரியாக இருக்கிறது, வேலைக்குப் போகலாம்! என்று அந்த டாக்டர்கள் சர்டிபிகேட் கொடுத்து விடுகிறார்கள். முதலாளிகளுடைய டாக்டர்கள் 'உடம்பு சரியில்லை' என்று சர்டிபிகேட் கொடுக்காவிட்டால், அதற்கு மேற்கொண்டு ஜில்லா மெடிகல் ஆபீசரிடம் போய் சர்டிபிகேட் வாங்கி, அதை 'ப்ரொட்யூஸ்' செய்தால் தான் சம்பளம் கொடுக்கிறான். ஆகையால், நாம் என்ன செய்யவேண்டுமென்றால், பிரசவத்திற்கு பிறகு அவர்களுக்கு உடம்பு சரியில்லை, அவர்களுக்கு ஏதாவது வியாதி கண்டிருக்கிறது என்றால், அவர்கள் முதலாளிகளுடைய டாக்டரிடம்தான் காண்பிக்கவேண்டும் என்று நிபந்தனை இருப்பதை மாற்றி, எந்த டாக்டரிடத்திலாவது காண்பித்து சர்டிபிகேட் வாங்கி அதை 'ப்ரட்யூஸ்' செய்தாலும், அதையும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று முதலாளிக்கு உத்தரவு போடவேண்டும். முதலாளிகள் தங்களுடைய சொந்த டாக்டரிடத்தில்தான் காண்பிக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். அவர்கள் சர்டிபிகேட் கொடுக்க மறுத்தால் தான், அதன் பிறகு ஜில்லா மெடிகல் ஆபீசரிடம் அப்பீல் செய்துகொள்ள வேண்டும். ஜில்லா மெடிகல் ஆபீசரிடம் போகும்போது, இரண்டு மூன்று வாரங்கள் கழிந்துவிடுகின்றன. அதற்குள் உடம்பும் சரியாய் விடுகிறது. பணமும் போய்விடுகிறது. இப்படியெல்லாம் சிக்கல் ஏற்படுகிறது. ஆகவே, பிரசவத்திற்குப் பிறகு உடம்பு சரியில்லையென்றால்—எல்லா டாக்டர்களும்

தான் தங்களைப் பதிவு செய்துகொண்டிருக்கிறார்கள் ஆதலால்,—அவர்கள் எந்த டாக்டரிடமாவது சர்டிபிகேட் வாங்கி ப்ரட்யூஸ் செய்து விட்டால் மூன்று வாரம் லீவ் கொடுத்துவிடவேண்டும் என்று இதைத் திருத்தினாலும் வேறு விதிகளை அமைச்சர் அவர்கள் ஏற்படுத்தினாலும் நல்லது என்று நான் நினைக்கிறேன்.

இம்மாதிரி காலங்களில் 12 அணா, அதாவது 75 நயா பைசேதான் மலைப் பிரதேசங்களில் இருப்பவர்களுக்கு என்று குறிப்பிட்டிருப்பது மிகவும் குறைவான தொகையாகும். 12 அணாவில் மலைப் பிரதேசத்தில் உள்ள வர்கள் எந்த விதமாக ஜீவனம் செய்ய முடியும்? உடம்பு நன்றாக இருக்கும்போது ஒரு பெண் தொழிலாளிக்கு ரூபாய் 1–5–0 கூலி கிடைக்கிற தென்றால், பிரசவத்திற்குப் பிறகு உடம்பு சரியில்லாமல் படுத்துக் கொண் டிருக்கும்போது 12 அணா கொடுத்தால் மருந்து வாங்குவதற்குக் கூட பணம் இல்லாமல் போய்விடுகிறது. பத்து ரூபாய் பிற்பாடு கொடுக்கலாம் என்று இருக்கிறது. 75 நயா பைசே என்று இருப்பதை ஒரு ரூபாய் என்று போட்டாலும் பரவாயில்லை. ஒரு ரூபாய் என்று போட்டால், முதலாளிகள் எந்த விதத்திலும் கெட்டுவிடமாட்டார்கள். தாராளமாகக் கொடுக்கலாம். ஒரு ரூபாய் வீதம் இப்படிப்பட்ட சமயங்களில் கொடுக்கும்படி முதலாளி களைச் செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

ப்ளாண்டேஷன் சட்டத்தின்படி இப்பொழுது ரூபாய் 63 கொடுக்கிறார்கள். ஆனால், சரியானபடி கூலியை இப்பொழுது நாம் அதிகப்படி கூலி நிர்ண யம் ஏற்படுத்திய பிறகு 75 நயா பைசே என்று கணக்கிட்டால் 73·50 நயா பைசே வருகிறது. ஆனால், 63 ரூபாய் தான் பழைய கணக்கு வைத்துக் கொண்டு கொடுத்துக் கொண்டு தொழிலாளிகளை ஏமாற்றிக் கொண்டு வருகிறார்கள். தொழிலாளிகளுக்கு விவரம் தெரியாது. தொ ழிற் சங்கத் தலைவர் சொல்லி, எவ்வளவு கொடுத்தார் என்று தெரிந்து, அதற்குப் பிறகு கால்குலேஷன் செய்து கொடுத்தால் தான் அவர்களுக்குத் தெரியுமே தவிர, அவர்களுக்காகவே தெரியாது. 63-ஐ வாங்கிக்கொண்டே இருக்கிறார்கள். 73·50 கொடுக்க வேண்டியதற்கு 63 ரூபாய் கொடுத்து விட்டு, முதலாளிகள் பாக்கியை இல்லையென்று சொல்கிறார்கள் என்று நேற்று லேபர் கமிஷனரிடம் ரிப்போர்ட் செய்திருக்கிறேன். தொழிலாளி களுக்கு பெரும்பாலும் கல்வி அறிவு இல்லாததால் அவர்களை முதலாளி கள் ஏமாற்றிவிடுகிறார்கள். ஆகையால், அவர்களுக்கு 75 நயா பைசே என்று இருப்பதை ஒரு பு பூரூபாய் வீதம் 12 வாரங்களுக்கு. கொடுத்துவிட வேண்டுமென்று சட்டத்தை மாற்றினால் நல்லது என்று என்னுடைய யோசனையைச் சொல்லிக் கொண்டு வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

* SRI T. T. DANIEL: Sir, this is a very glorious Bill. The object of this Bill seems to be to render relief to the women workers working in factories and industrial establishments. I would suggest that the scope of the Bill be enlarged so as to bring all women workers. According to the Bill as it now stands women workers are entitled to leave with full wages for a period of three weeks in cases of miscarriage. I do not know why such a concession should not be given for the women workers after confinement. Whereas in the case of miscarriage, the women workers are entitled to leave with full wages, in the case of confinement, they are entitled to have only 75 nP a day or 7/12 of their average daily wage, I would suggest that there should not be any difference between miscarriage and also the period after confinement.

Then another thing is that in the case of miscarriage, the provision is that women workers are entitled to leave without wages for a maximum period of one month. So, they are entitled

to leave for one month, but they will not be getting any wage at all for the leave period. That also should be taken into consideration and the concession which the Government give for the ordinary period of six weeks after confinement should be given for one month in the case of leave taken for miscarriage.

The women workers are entitled to the full benefits only if they satisfy certain conditions. The provision in the Bill says: 4 p.m.
'Provided further that a woman worker shall not be entitled to maternity benefit unless she has entered the service under the employer from whom she claims maternity benefit not later than thirty-five weeks immediately before the week in which the confinement takes place or immediately preceding the date on which she gives notice under sub-section (1) of section 6, whichever is earlier'. That is the condition imposed, namely that the woman workers should have worked for a certain period under the employer from whom she claims maternity benefit. In the principal Act only 240 days alone is prescribed. Now the period has been extended to 35 weeks. I hope the Hon. Minister in charge of the Bill will give the reason why this period has been extended.

**Sri S. M. ANNAMALAI**: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த மசோதா கொண்டுவரப் பட்டிருப்பதற்காக நான் தொழில் மந்திரி அவர்களைப் பாராட்டுகிறேன். பாராட்டுவது மட்டுமல்ல. பிரசவ காலத்தில் பெண் தொழிலாளர்களுக்கு சம்பளம் கொடுக்கப்படவேண்டும் என்கிற மசோதாவை அதுபற்றிய வேதனைகளை எல்லாம் நன்கு அறிந்த ஒரு பெண் அமைச்சர் கொண்டு வந்திருப்பார்களேயானால் மிகவும் நன்றாக இருந்திருக்கும். அதன் உண்மை விளைவுகள் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். இன்னும் அதிகமாக வேஜஸ் கொடுக்க வேண்டும் என்பதாகச் செய்திருப்பார்கள். மற்ற சட்ட மன்ற உறுப்பினர்கள் சொன்னது போல நானும் சொல்ல ஆசைப்படுகிறேன், 75 நையா பைசா என்பது மிகமிக குறைவான ஊதியம். அதோடு மெடிகல் போனஸ் 10 என்று கொடுக்கப்பட்டிருப்பது போதாது. அதை 50 ரூபாயாக கொடுக்க வேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதற்கடுத்தபடியாக மூன்று வாரம் முழுச் சம்பளம், ஒரு மாதம் சம்பளம் இல்லாமல் என்று இருக்கிறது. அதை அரைச் சம்பளம் கொடுக்க வேண்டும் என்றாவது செய்ய வேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். மேலும் இந்த 75 நையா பைசே என்று இருப்பதை அதிகப்படுத்த வேண்டும் என்பதாகவும் கேட்டுக் கொள்கிறேன். அதே சமயத்தில் முதலாளிகள் இதை எதிர்த்தாலும் சொல்லலாம் எங்கள் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் குடும்பக் கட்டுப்பாட்டைப்பற்றி தீவிரமாகப் பிரசாரம் செய்து வருகிறார்களய்யா. நீங்கள் கவலைப்படவேண்டாம், ஒருவருக்கு இரண்டு குழந்தைகளுக்கு மேல் உண்டாகாது, ஆகவே இந்த இரண்டு குழந்தைகளை அவர்கள் பெற்றெடுத்துக் கொள்ளும் காலத்திலாவது இந்த வசதிகளையெல்லாம் கொடுக்கவேண்டும் என்பதை வற்புறுத்த வேண்டுமென்பதாகக் கேட்டுக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

* **Sri M. JAGANNATHAN**: Mr. Speaker, Sir, I rise to welcome this Bill because I feel that it is a very beneficial legislation which is a social legislation and a labour legislation at that. For this reason I would like to congratulate the Hon. Minister for Industries on having brought before this Assembly this piece of beneficial legislation. The Hon. Minister who is in charge of the Bill is eminently fitted and very well-equipped for the task that he has undertaken namely to bring in a labour legislation a social

[Sri M. Jagannathan] [3rd April 1958

legislation of this type which aims at bettering the conditions of women workers employed in factories and industrial establishments in our State.

While I say all this I would also like to take a peep into the history of this legislation. If my memory serves me aright I think it is the Whitley Commission which came to India that studied first the labour conditions obtaining in our country. Followed by that the Royal Commission on Labour visited India in the year 1931 or 1932. They toured the entire country and studied the conditions of labour and made several salutory recommendations with a view to improve the conditions of workers employed in factories and industrial establishments in the country as a whole. In pursuance of the recommendations of the Royal Commission on Labour the Government of India and particularly the Madras Government at that time came forward with a legislation like this and that was ably discussed in the then Legislative Council and passed without many amendments.

This Royal Commission on Labour which came to India witnessed several appalling conditions and circumstances under which the women workers were employed in the various factories and industrial establishments in the country at that time. Those were days when the poor women workers were exposed to all sorts of difficulties and risks and uncertainties and they had to bear them all in the course of their employment which affected their health and income. In those days women workers were employed in factories and industrial establishments in spite of the fact that they were pregnant. During the pre-natal and post-natal periods they were compelled to work. This was very injurious to their health. In order to improve their conditions the Royal Commission on Labour recommended these and the Bill which was framed then embodying those recommendations conferred certain benefits to those poor women workers. These poor people to eke out their daily bread were compelled to work in the factories and industrial establishments and this is a fact which we must all sympathize with. Unlike women belonging to the richer sections of the society these people are forced to do such hard work on account of their dire poverty and need to earn a livelihood to keep their body and soul together. That is something very deplorable and I think this Government which swears by the establishment of a Socialistic pattern of society by gradual steps has certainly taken a step in the right direction. Therefore I welcome this Bill.

In doing so I would like to point out one or two pitfalls one or two irregularities that this Bill contains. One adverse effect of this Bill I am afraid will be to discourage some of the employers from employing women workers, they may even shut out or exclude women workers, because they might be annoyed at the Government conferring so many benefits on the workers and interfering in the management of their factories. Some of the employers were willing to take these women workers because they had to pay only less wages. Hereafter they may not be enthusiastic in

employing them because Government have brought this kind of legislation. Hereafter they will have to pay more in terms of money to the women workers and they will have also to make themselves answerable to the Inspectors of Factories.

Therefore, this is an inherent difficulty which the Government should be aware of. I suggest that the Government should come forward with all possible steps to guard against this sort of difficulty in the matter of employment of women workers. The Hon. Minister, who was an experienced trade unionist, would be aware of this and I hope he will give due consideration to this point. 4-10 p.m.

The so-called increased benefits which this Bill seeks to confer on the women workers are not substantial in point of wages, leave facilities, etc. If the Government are really sincere about conferring greater benefits on the women workers with a view to improving their condition, the Government should examine some of the amendments given notice of by the Opposition parties in particular, besides the amendments given notice of by those on the other side. Womenfolk are in a peculiar position when compared to men. There is a biological difference between men and women, in the matter of child birth. Women are suffering from this biological handicap. And so they must certainly stand on a different footing. The Government therefore must come forward to provide them greater benefits so that these may go a long way in alleviating their sufferings. I hope the Government will really bestow their thought on some of these amendments and be magnanimous enough to accept them. These will certainly tend to improve their condition of work in factories and industrial establishments. When women are in a state of pregnancy they need more money to spend on their treatment. They have to pay doctors and nurses. So there must be an opportunity provided for them to get increased wages during pregnancy so that they may be able to take care of their health. Only then we can expect poor women to be in a position to safeguard their health. The Government must in all sincerity come forward to provide increased benefits for women workers in all these respects.

I once again appeal to the Government to provide substantial benefits to women workers so that this legislation may not be a mere paper legislation and an eye-wash but a real boon to women workers. I hope the Government will translate all our suggestions into action.

**Sri P. S. CHINNADURAI:** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்த சபை முன்பாக பிரேரேபணை செய்யப்பட்டிருக்கிற 1958-ம் வருஷத்திய சென்னை மகப் பேறு சகாய திருத்த மசோதாவை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். இந்த சட்டத்தை நான் வரவேற்பதற்கு மிக முக்கிய காரணங்கள் உண்டு என்பதை தாங்கள் நன்றாக அறிவீர்கள். ஒரு பக்கத்தில் குழந்தைகளைப் பெற வேண்டாமென்று மிகவும் தீவிரமாகப் பிரசாரம் செய்யப்படுகிற வேளையிலே இந்த சட்டம் இங்கு கொண்டு வரப் பட்டிருக்கிறது. மிகவும் துணிச்சலான நல்ல செயல், அது. நான் இந்த மசோதாவைக் கொண்டு வந்துள்ள அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். குழந்தைகளைப் பெறாமல் தடுப்பதற்கு கமிஷன் கொடுக்கிறேன், அந்தக்

[Sri P. S. Chinnadurai] [3rd April 1958

கமிஷனை அதிகரிக்கிறேன் என்று அறிவிப்புகள் கொடுக்கப்படுகிற வேளையில் நீங்கள் குழந்தைகளை பெறுங்கள் உங்களுக்கு போதிய அளவு அதிகமான சகாயம் கொடுக்க சர்க்கார் தயாராகயிருக்கிறது என்று அறிவிக்கும் முறையில் இந்த சட்ட மசோதா இங்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. அந்நிலையில் இது, தொழிற்சாலைகளில் வேலை செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிற தாய் குலத்திற்கு ஒரு சிறந்த சேவையாகும் என்பதில் சந்தேகமே கிடையாது. பெண்கள் எப்பொழுது தொழிற்சாலைக்கு வேலை செய்யப் போகிறார்கள் என்றால், மிகுந்த துன்பம் ஏற்படும்போது கணவன் வருமானத்தை கொண்டு மாத்திரம் சரிக்கட்ட முடியாமல் போகும்போது தான் தொழிற்சாலைகளுக்கு வேலைக்குச் செல்ல நம் நாட்டில் பெண்கள் துணிகிறார்கள். ஆகவே, அந்த நிலையிலே, கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற தாய் குலத்திற்கு மிகவும் சிறந்த முறையிலே சேவை செய்யும் முறையிலே இந்த திருத்த மசோதா அமைந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. பல திருத்தங்கள் இந்த திருத்த மசோதாவிற்கு பிரேரபணை செய்யப்பட்டிருக்கிறது. நல்லெண்ணத்தோடுதான் அத்திருத்தங்கள் பலவும் இங்கு பிரேரபணை செய்யப்பட்டிருக்கிறது, என்பதில் ஆட்சேபணையில்லை. ஆனால் எந்த சந்தர்ப்பத்தில் இந்த மசோதா வந்திருக்கிறது என்பதை நாம் கவனிக்க வேண்டும். இப்பொழுதுள்ள சந்தர்ப்பத்தில் இந்த மசோதா கொண்டு வரப்பட்டதே பெரிய காரியம். இதற்கு இன்னும் பல திருத்தங்கள் நாளடைவில், காலக்கிரமத்தில் நாம் செய்து கொள்ளலாம். அதற்கு பெரிய தடை எதுவும் இருக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. இந்த திருத்த மசோதாவை எந்தளவு இன்னும் அபிவிருத்தி செய்யவேண்டுமோ அந்தளவு அபிவிருத்தி செய்து கொள்ள நமக்கு இன்னும் சந்தர்ப்பம் கிடைக்கும், இன்னும் நான்கு ஆண்டுகளுக்குள்ளாகவே கனம் அமைச்சர் அவர்கள் தனது பதவிக் காலத்திலேயே கூட இதற்கு பல திருத்தச் சட்டங்கள் கொண்டு வந்து நிறைவேற்ற வாய்ப்புகள் இருக்கின்றன என்று கூறலாம். இங்கு கொண்டுவரப்பட்டிருக்கும் திருத்தங்களைப் பார்க்கும் போது, அதை அமைச்சர் அவர்கள் அறியாமல் இருந்திருப்பார் என்று சொல்வதற்கில்லை. அவர் அறிந்ததுதான். இப்பொழுது இந்த திருத்த மசோதாவையே கொண்டு வர துணிச்சல் இருந்ததே, அதை விட அபிவிருத்திகரமான திருத்தங்களைக் கொண்டு வருவது எப்படி என்று அவர்கள் எண்ணிப் பார்த்திருக்கக் கூடும். ஆகவே, இந்தளவோடு நிறுத்திக் கொண்டார்கள் என்று நினைக்கிறேன். இதிலே, அதிகமாக ஒரு விஷயத்தைப் பற்றிச் சொல்லப்பட்டது. 75 நயா பைசா அல்லது 12-ல் ஏழு பங்கு என்று இருக்கிற உதவியைப்பற்றி. நான் நினைக்கிறேன், அங்கத்தினர்கள், சம்பளம் என்பதை சரியாக புரிந்து கொண்டார்களோ என்று. சம்பளம் என்பது "பேமெண்ட் ஆப் வேஜஸ் ஆக்ட்" படி, டியர்னஸ் அலவன்ஸ் எல்லாவற்றையும் சேர்த்துத்தான் என்று கருதுகிறேன். அப்படிப் பார்க்கும்போது, 12-ல் 7 பங்கு என்றிருப்பது சரியானதுதான் என்று கூறுவேன். ஏனென்றால், இப்பொழுது இன்ஷூரன்ஸ் திட்டத்தில், இதே அளவிற்கான ஒரு உதவிதான் கொடுக்கப்படுகிறது. அதாவது, 12 வார காலம் ஸிக் லீவாக அனுமதிக்கப்படுகிறது. அந்தக் காலத்தில் மொத்தத்தில் பெறுகிற சம்பளத்தில் 55 சத விகிதம் உதவித் தொகையாக கொடுக்கிறார்கள். அந்த அடிப்படையில்தான் இது கொண்டு வரப்பட்டிருக்கக்கூடும் என்று கூட நான் நினைக்கிறேன். கிட்டத்தட்ட கணக்கு சரியாகத்தான் வருகிறது. ஆகவே, 75 நயா பைசா அல்லது 12-ல் 7 பங்கு, எது அதிகமோ அதைக் கொடுக்கலாம் என்று இருப்பது சரி என்று ஒப்புக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது. மலைப் பகுதிகளில் வாழும் தொழிலாளிகளுக்கு உதவி அதிகம் கொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள். இது குறித்து அமைச்சர் அவர்கள் இன்னும் சிறிது காலம் கழித்து ஒரு திருத்தச் சட்டம் கொண்டு வந்தால் கூட நான் ஆச்சரியப்பட மாட்டேன். இவைகளையெல்லாம் அவர் கவனத்தில் வைத்துக்கொண்டு வேண்டியது செய்வார்கள் என்ற நம்பிக்கையோடு இதை முழு மனதோடு வரவேற்கிறேன்.

4-20 p.m. பல குறிப்பிடத்தக்க அம்சங்கள் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதுவரை இல்லாத முறையில் யாருமே நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு

3rd April 1958] [Sri P. S. Chinnadurai]

தொழிற் சங்க வாதிகள் எல்லாம் எத்தனையோ நாட்களாக எதிர்பார்த்திருந்த இந்த மசோதா இன்றைய தினம் இங்கு கனம் அமைச்சர் அவர்களால் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இது ரொம்பவும் போற்றுதற்குரியது என்று நான் கருதுகிறேன். எத்தனையோ சலுகைகளை தொழிலாளர்கள் அடைய முடிய வில்லையே என்று தொழிற்சங்க வாதிகள் எல்லாம் நினைத்துக் கொண்டிருந்தார்கள். அதை எல்லாம் நீக்குவதற்கு வழியே கிடையாதா என்று அஞ்சிக் கொண்டிருந்த காலம் உண்டு. இதில் எவ்வளவோ கவனம் செலுத்தப்பட்டு இந்த மசோதா இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது. சர்ச்சைக்குரிய பல விஷயங்களைப்பற்றியும் அமைச்சர் அவர்கள் இதில் ஆலோசித்திருப்பார்கள் என்று நம்புகிறேன். ஆகவே இந்தச் சட்டத்தை நான் முழு மனதோடு வரவேற்கிறேன். பின்னால் திருத்தங்கள் வந்தாலும் அவைகளையும் நான் சந்தோஷத்தோடு வரவேற்பேன் என்று சொல்லிக் கொண்டு இந்த மசோதாவை நான் வரவேற்றுக் கொள்கிறேன்.

* **Srimathi P. K. R. LAKSHMIKANTHAM** : கனம் சட்டசபை தலைவர் அவர்களே, இந்த பிரசவ மசோதாவை நான் மட்டற்ற மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன். பிரசவம் என்றாலே பெண்களின் புனர் வாழ்வு என்பதுதான் அர்த்தம். அப்படிப்பட்ட பெண் தொழிலாளர்களுடைய கஷ்டங்களை நினைத்து அவர்கள் பிரசவ காலத்தில் அவர்கள் படும் இன்னல்களை எல்லாம் நினைத்து அவர்களுக்கு நல்ல முறையில் லீவு கொடுக்கப்பட வேண்டும், நல்ல முறையில் சம்பளம் கொடுக்க வேண்டும் என்றும், அதற்காக நல்ல முறையாக சட்டத்தை திருத்தி அமைக்க வேண்டும் என்பதையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு அமைச்சர் அவர்கள் இந்த மசோதாவை கொண்டு வந்திருக்கிறார்கள். அதற்காக அமைச்சர் அவர்களுக்கு பெண்க்ளின் சார்பாக நான் என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். இதில் பல நல்ல அம்சங்கள் இருந்தாலும் ஒன்றை எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். பிரசவத்திற்கு முன்பு ஆறு வாரம் என்றும், பிரசவத்திற்கு பின்பு ஆறுவாரம் என்றும் லீவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனக்கு முன்பு பேசிய திரு. மாதா கவுடர் அவர்கள் இதைப்பற்றி குறிப்பிட்டார்கள். சாதாரணமாக பிரசவம் என்பது எப்போது ஏற்படும் என்பது தெரியாது. சிலருக்கு ஒரு மாதத்திற்கு முன்னாலே அதற்கான அறிகுறிகள் இருக்கும். சிலருக்கு இருக்கவே இருக்காது. ஆகவே, இந்த லீவு முன்பும் பின்பும் என்று இருப்பதை நீக்கிவிட்டு பொதுவாக 12 வாரங்கள் என்று இருந்தால் நல்லதாக இருக்குமென்று நினைக்கிறேன். பதினைந்து நாட்களுக்கு முன்னால் பிரசவமாகி விட்டாலும் அதற்கு பின்பு லீவை 12 வாரங்களாக அனுஷ்டிக்கப்படவேண்டும். ஆகவே, இதை திருத்தி அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் பிரசவ நாட்களில் முழு சம்பளம் கொடுத்தாலும் அதை பெண்கள் எல்லோரும் வரவேற்பார்கள். இப்போது இதில் 12 அணா என்று சம்பளம் குறிக்கப்பட்டிருக்கிறது. இதை குறைந்த பட்சம் ஒரு ரூபாயாக கொடுக்க வேண்டும் என்று இருக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மேலும் குறை பிரசவத்திற்கு மூன்று வாரகாலம் லீவு என்று சொல்லப்பட்டிருக்கிறது. அது போதாது என்று நினைக்கிறேன். குறை பிரசவம் என்பது இரண்டு விதத்தில் ஏற்படக்கூடும். ஒன்று எட்டாவது மாதத்தில் குறை பிசரவம் ஏற்படக்கூடும், இன்னொன்று நான்காவது மாதத்தில் ஏற்படுகிற குறை பிரசவம். ஆனால் எட்டாவது மாதத்தில் ஏற்படுகிற குறை பிரசவம் 10 மாதங்கள் சுமந்து பிறகு நடக்கும் பிரசவத்திற்கும் எட்டாவது மாதத்தில் ஏற்படும் குறை பிரசவத்திற்கும் வித்தியாசம் இல்லை என்பது தான் என்னுடைய கருத்தாகும். ஆகவே, இந்தக் குறைந்த பிரசவம் என்பதில் இரண்டு அர்த்தம் கொடுக்க வேண்டும். அதாவது நான்காவது மாதம் வரைக்கும் ஆறு வாரம் லீவு கொடுத்தால் போதும் என்று இருக்கவேண்டும். எட்டு மாதத்திற்கு மேல் ஏற்படும் குறை பிரசவத்திற்கு அதற்கு சாதாரண பிரசவ காலத்தில் கொடுக்கப் படும் லீவு, சம்பளம் இவைகள் எல்லாம் கொடுக்கப்பட வேண்டும் என்பது என்னுடைய கருத்தாகும். ஆகவே இவைகளை எல்லாம் கவனித்து இவர்களுக்கு பிரசவ காலத்தில் முழு சம்பளம் கொடுக்கப்பட வேண்டும் என்பதை நான்

மீண்டும் மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த காலத்தில் முழு சம்பளம் கொடுப்பதற்கு சட்டம் கொண்டு வர முடியாது என்று இருந்தாலும், இதை திருத்தி அமைக்க முடியுமானல் இதில் 12 அணு என்றிருப்பதை குறைந்தது ஒரு ரூபாய் என்று திருத்தி அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இந்த மசோதாவை நல்ல முறையில் கொண்டு வந்து இங்கு பாஸாக போவதைப்பற்றி நினைக்கும்போது நான் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். இந்த இரண்டு திருத்தங்களும் இதில் கொண்டு வந்தால் நல்லது. அதையும் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இதை நான் வரவேற்கிறேன்.

**SRI K. SATTANATHA KARAYALAR:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் முழு மனதோடு வரவேற்கிறேன். இதில் ஒரே ஒரு விஷயத்தை மாத்திரம் சுட்டிக்காட்ட அவாவுறுகிறேன். இந்த மசோதாவில் தாய்குலத்தை கௌரவிக்கக்கூடிய முறையிலும் பிரசவ காலத்திற்கு 12 வாரங்கள் லீவு என்றும் அந்தக் காலத்திற்கு 75 நயா பைசா சம்பளம் கொடுக்கக்கூடிய முறையிலும் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. முன்பு இருந்ததைவிட நல்ல முறையில் இப்போது நான்கு அணு அதிகமாகவும், லீவு விஷயத்தில் முன்பு ஏழு வாரங்களாக இருந்ததை இப்போது 12 வாரங்களாகவும் உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனல் குறைந்தபட்சம் இந்த காலத்தில் முழு சம்பளத்தையும் கொடுக்க வேண்டும் என்பதுதான் என் அபிப்பிராயமும். இதைப்பற்றி கனம் அம்மையார் அவர்கள் குறிப்பிட்டார்கள். அகால பிரசவ உபாதைகளுக்கு உட்படும் ஆள்களுக்கு மூன்று வார காலம் முழு சம்பளம் கொடுக்கப்பட வேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஆனல் பிரசவ காலத்தில் அதாவது குறைந்தபட்சம் நான்கு மாதங்களுக்கும் முழு சம்பளம் கொடுத்தால் நல்லதாக இருக்கும். அதற்கு மேல் லீவு எடுப்பதாயிருந்தால் 12 அணு என்று ஒரு ஷரத்தை ஏற்படுத்தலாம். இவ்விதம் ஷரத்துக்களை வைத்தால் பெண்களை அதிகமாக வேலைக்கு வைத்துக்கொள்ளமாட்டார்கள் என்று அமைச்சர் அவர்கள் சுட்டிக்காட்டக்கூடும். சாதாரணமாக பெண்களை வேலைக்கு வைத்திருப்பவர்கள் இவ்விதம் சட்டங்கள் வந்தால் பெண்களை வேலையிலிருந்து குறைத்துவிடுவார்கள். குறைந்த கூலியை கொடுத்து வேலை செய்யலாம் என்ற நினைப்பில்தான் பெண்களை அதிகமாக வைத்துக் கொள்ளுகிருர்கள். ஆனல் இவ்விதம் சட்டம்வரும்போது அவர்கள் பெண் தொழிலாளர்களை குறைத்துக்கொள்ளக்கூடும். கழிந்த காலத்தை எடுத்துப்பார்த்தாலும் பெண் தொழிலாளர்களை குறைத்துக்கொண்டு வருவதை நாம் பார்க்கலாம். அதை நாம் தடுத்தாக வேண்டும். இதற்கு குறைந்தபட்சம் இத்தனை சதவிகிதம் பெண் தொழிலாளர்களை வைத்துக் கொள்ளவேண்டும் என்று அதற்கு சட்டம் செய்வது அவசியம் என்றிருக்குமானல்—அதற்கு ஒரு சட்டத்தை செய்தாக வேண்டும். ஆகவே இவ்விதம் பெண்களை வேலையினின்றும் நீக்கப்படுவதை தடுக்கின்ற முறையில் இந்த வசதியை செய்து கொடுக்க சர்க்கார் தவறக்கூடாது. ஆகவே இதைப்பற்றி எதிர்க்கட்சியிலிருந்து கொடுக்கப்பட்டிருக்கும் திருத்தங்களை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். அந்த முறையில் இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அதோடு மருந்து செலவுக்கு என்று ஒரு சிறிய தொகையும் இதில் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**SRI M. KALYANASUNDARAM:** கனம் சபாநாயகர் அவர்களே, சாதாரணமாக சட்டம் எவ்வளவு நல்லதாக இருந்தபோதிலும் அதை முறியடிப்பதில்தான் முதலாளிகள் தங்கள் கவனத்தை செலுத்துவார்கள் என்பதை தனது சொந்த அனுபவத்திலேயே அமைச்சர் அவர்களே உணர்ந்திருப்பார்கள். ஆகவே இந்தச் சட்டங்கள் எல்லாம் எவ்வளவு நல்ல சட்டங்களாக இருந்தாலும் அதற்கு உற்சாகம் காட்ட முடியவில்லை. இந்த மசோதா சம்பந்தப்பட்டமட்டில் இதனல் அதிகப்படியான சலுகையை தொழிலாளர்கள் அடைகிருர்கள் என்று சொல்ல முடியாது. ஏற்கெனவே நமது ராஜ்யத்திலுள்ள பஞ்சாலை தொழிலாளர்

3rd April 1958] [Sri M. Kalyanasundaram]

களுக்கு கிடைக்கக்கூடிய சலுகை கிட்டத்தட்ட இந்த அடிப்படையில்தான் இருக்கின்றன. இன்னும் சொல்லப்போனால் சில இடங்களில் இதைவிட அதிகமாக இருக்கும். இந்த மசோதா நமது ராஜ்யத்தில் பின்தங்கி இருக்கக்கூடிய தொழிலாளர்களுக்கு ஒரு உதவி அளிக்கவேண்டும் என்று மத்திய சர்க்கார் நிர்ணயித்த ஒரு விகிதத்தின் அடிப்படையில் தான் இந்த மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த மசோதா வினால் போதிய அளவு திருப்தி ஏற்பட முடியவில்லை என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். பின்னர் நமக்கு சந்தர்ப்பம் கிடைக்கக்கூடிய சமயத்திலாவது இதற்கு தக்க மாறுதல் கொண்டுவரவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். குறைந்தது 12 வாரத்திற்கும் முழுச் சம்பளம் இருக்கவேண்டும். முழுச் சம்பளம் இல்லாமல், 12 அணு அல்லது சம்பளத்தில் 12-ல் 7 பாகம் என்று போட்டிருப்பது மிகவும் குறைவானது. உண்மையில் இதை 6 வார காலத்திற்குத்தான் அனுபவிக்க முடியும். அதற்கு முன்னதாக கணக்குப் போட்டு 6 வாரம் ஓய்வு எடுத்து பலனை அனுபவிப்பது சாத்தியமல்ல. அதற்கு ஈடாகக் கொடுக்கப்படும் தொகை என்ன? பத்து ரூபாய்தான். அந்தத் தொகையை அதிகப்படுத்தி 25 ரூபாயாகவோ அல்லது 50 ரூபாயாகவோ போட்டிருந்தால், நிச்சயமாக அதிக அனுகூலம் இருக்கும் என்பதை நான் ஒப்புக்கொள்வேன். இதனால் கிடைக்கக்கூடிய அனுகூலத்தைப் பெறக்கூடியவர்கள் ரொம்ப சொல்பமானவர்கள். இன்னொரு காரணமும் இருக்கிறது. எண்ணெ மில்கள், அரிசி மில்கள், இந்த மாதிரி மில்களில் வேலை செய்கின்ற தொழிலாளிகளுக்கு இந்தப் பலன் கிடைக்குமா என்பதே சந்தேகம். இப்பொழுது பாக்டரி சட்டங்கள், சம்பளப் பட்டுவாடா சட்டம், அமலில் இருந்தும்கூட, இந்த மில்களிலே "Casual Labour" என்கிற முறை தான் கையாளப்பட்டு வருகிறது. பிரசவ காலத்திற்கு முன்னதாக 35 வாரங்களுக்கு, அதாவது 245 நாட்களுக்கு, ஒரே முதலாளியின்கீழ் வேலை செய்திருக்கவேண்டுமென்ற நிபந்தனை இருக்கிறது. அதன்படி பார்த்தால் இந்த மில்களில் இருக்கக்கூடிய பெண் தொழிலாளிகளுக்கு இந்தப் பலன் கிடைப்பது துர்லபம். அநேகமாக யாருக்கும் கிடைக்காது. அதற்குத் தகுந்த முறையில் கணக்கு வைத்துக்கொண்டிருக்கிறார்கள். "Casual Labour" முறை இருக்கக்கூடாது. அது அடியோடு ஒழிந்தால் தான் இதனால் கிடைக்கக்கூடிய பலன் ஒரு சிலருக்காவது கிடைக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். அதிலே தனியாக கண்காணிப்பதற்காக உத்தி யோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டிருப்பது வரவேற்கத்தக்கது. படித்தவர் களுக்கு வேலை கிடைக்கும் என்பதுமட்டுமல்ல. அவர்கள் போய் கண் காணித்து இஷ்டப்பட்டவர்களையும் அழைத்துப் போகலாமென்று இருக்கிற ஷரத்தை வரவேற்கிறேன். இஷ்டப்பட்டவர்களை அழைத்துச் செல்லாமென்று சொல்லும்போது போலீஸ்காரர்கள் என்று நான் எடுத்துக்கொள்ளவில்லை. தொழிற்சங்க ஊழியர்கள் என்று எடுத்துக் கொள்கிறேன். தொழிற்சங்க ஊழியர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத் திருப்பது வரவேற்கத்தக்கது. அதோடு அந்தத் தொழிலாளிகள் கொடுக் கக்கூடிய வாக்குமூலத்தை சாட்சியமாக எடுத்துக்கொள்ளக்கூடாது என்று இருக்கிறது. தங்களுடைய நலனுக்கு எதிராக சாட்சியம் கொடுக்குமாறு கட்டாயப்படுத்தக்கூடாது என்ற பகுதியை வரவேற்கிறேன். அமல் நடத்துவதில் நாம் எடுத்துக்கொள்ளக்கூடிய நடவடிக்கையைப் பொறுத் திருக்கிறது இதனால் பெண் தொழிலாளிகளுக்குக் கிடைக்கக்கூடிய பலன். சட்டத்தை மட்டும் இயற்றிவிட்டால் போதாது. சட்டத்தை அமல் நடத்து வதிலும் நிர்வாகம் சுறுசுறுப்பாக இருந்து, இந்த சட்டத்தில் இருக்கக் கூடிய நலன்கள் யார் யாருக்குக்கிடைக்க வேண்டுமோ அவர்களுக்குக் கிடைப்பதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மசோதாவை வரவேற்கிறேன். 4-50 p.m.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Speaker, Sir, I wholeheartedly welcome this measure. There can be no two opinions about this. The Hon. Minister is careful enough to introduce many safeguards. But still I would like to say a few words concerning certain clauses. As one of the hon. Members 4-35 p.m.

has pointed out, the employers may try their level best to see that women workers are shut out from the field altogether. Of course, it is left to their option. There is no provision here to compel the employers to employ these womenfolk. So, indirectly this will work some hardship to the womenfolk.

I thank the Hon. Minister for having enhancd the scales of wages during the pre-natal and the post-natal period for the nursing mother. But I find that there is provision in the Bill only for one Inspector to enforce the provisions of this Bill in the whole State. I doubt very much Sir, whether it will be possible for one Inspector to enforce the provisions of this Bill, in addition to the other work he may have. Unless the Acts that are passed and measures like this—are enforced properly, the object of passing such Bills will be frustrated.

I wholeheartedly endorse the view of Sri Sattanatha Karayalar that provision also should be made for providing some amount for purchase of medicines, etc. That also should be favourably considered. Many amendments have been introduced by so many hon. Friends and I am sure the Government will give due weight to those amendments and accept the proposals as far as possible.

4-37 p.m. THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர்கள் பேச்சிலிருந்து போதுமான அளவு தமிழ் வார்த்தைகளைக் கற்றுக்கொண்டு விட்டேன். மகப்பேறு சகாய சட்டத்திற்கு ஆதரவு அளித்த எல்லா அங்கத்தினர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த சட்டமானது—பெருமையுடன் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன், இந்திய ராஜ்யங்களிலே சென்னையில் வெகு காலத்திற்கு முன்பாகவே கொண்டுவரப்பட்டது. சரித்திரத்தை இப்பொழுது சொல்லவேண்டிய அவசியம் என்ன என்று சொன்னால், இப்பொழுது என்னென்ன வாதங்கள் சொல்லப்படுகின்றனவோ அவைகள் அப்பொழுதும் சொல்லப்பட்டது. அவை நடைமுறையில் உண்மையாக எந்தவிதமான கஷ்டத்தையும் கொடுக்கவில்லை என்பதை எடுத்துக்காட்டுவதற்காகத்தான் சொல்லுகிறேன்.

**1919**-ம் வருஷத்தில் சர்வதேச தொழிலாளர் சம்மேளனம் வாஷிங்டன் மகாநாட்டில் மகப்பேறு சகாய உதவி கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்தது. அதற்குப் பிறகு **1924**-வது வருஷத்தில் காலம் சென்ற தொழிற்சங்கத் தந்தை ஸ்ரீ என். எம். ஜோஷி அவர்கள் இதற்காக ஒரு சட்டத்தை மத்திய சட்டசபையிலே கொண்டுவந்தார்கள். அன்றைக்கு அங்கு இருந்த சபை அதை நிராகரித்துவிட்டது. அதற்குப் பிறகு மத்திய சட்டம் இன்றுவரையிலும் கிடையாது. ஆனால் நல்ல முற்போக்கான ராஜ்யங்கள் இந்த மகப் பேறு சகாயச் சட்டம் செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன் அவரவர்களுக்கு வேண்டிய சட்டங்களைச் செய்ய முன் வந்தார்கள். **1929**-ம் வருஷத்திலே பம்பாயிலும், **1934**-ல் சென்னையிலும் இந்தச் சட்டம் செய்யப்பட்டது. சட்டம் செய்கின்ற காலத்தில் விவாதத்தின் போது, இந்த மாதிரி சட்டம் ஏற்படுத்துவதன் மூலமாக பெண்களுக்கு கொஞ்ச நஞ்சம் கிடைக்கிற வேலையும் கிடைக்காமல் போய்விடும் என்ற பயம் தெரிவிக்கப்பட்டது. ஆனால் சமுதாயம் வளர்ச்சி அடைகிற போக்கிலே தொழிலாளர்களுக்கும் சமூகத்திற்கும் நன்மை பயக்கக்கூடிய சட்டங்களை நிறைவேற்றினால், சமுதாயத்திற்கோ அல்லது தொழில் வளர்ச்சிக்கோ எந்தவிதமான குந்தகமும் ஏற்படாது என்பதை சரித்திரம் எடுத்துக்காட்டியிருக்கிறது. ஆகவேதான் அந்த முறையில் தெரிவித்துக்

3rd April 1958] [Sri R. Venkataraman]

கொள்கிறேன், ஓரளவு சகாய உதவியானது அதிகப்படுத்தப்பட்டு இருந்தாலும் அதனால் எந்தவிதமான கேடும் விளைந்துவிடாது என்று. சமுதாயத்தினுடைய முற்போக்கின் அடிப்படையில் நோக்குகிறபொழுது, இந்தவிதமான சட்டங்கள் செய்தவன் மூலமாக, தொழில் வளர்ச்சி போன்றவைகள் நன்றாகப் பெருகும் என்பது தெரிகிறது. இந்த சட்டத்திலே நாம் கொடுத்திருக்கிற சலுகைகள் எல்லாம் அகில இந்திய அடிப்படையிலே விவாதம் செய்யப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டவை. அந்த அகில இந்திய அடிப்படையில் விவாதம் செய்கின்றபோது, எல்லாத் துறையில் இருக்கக்கூடியவர்களும், தொழிற்சங்கத் தலைவர்களும், சர்க்கார் பிரதிநிதிகளும், எல்லோருமாக சேர்ந்து நன்றாக பரிசீலனை செய்யப்பட்டவை. எந்த முறையில் உதவி அளித்தால் ஒரு தொழிலாளருக்கு கஷ்டம் ஏற்படாமல் இருக்கும், தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்வதில் குறைந்துவிடாமல் இருக்கும் என்றெல்லாம் யோசனை செய்த பிறகுதான் இன்றைக்கு இவ்விதமான ஒரு சட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறோம். 4-40 p.m.

கனம் அங்கத்தினர்கள் 12 வாரத்திற்கும் முழு சம்பளம் கொடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். கனம் அங்கத்தினர் லட்சுமிகாந்தம்மாள் ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் கொடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். எந்த அளவுக்கு சட்டத்தில் மாறுதல் செய்தால் வேலைக்கு அமர்த்திக் கொள்வதில் குந்தகம் ஏற்படாத நிலைமை இருக்குமோ, எந்தவிதமான கஷ்டம் ஏற்படாமல் இருக்குமோ, இவைகளையெல்லாம் யோசித்துத்தான் விகிதாசாரங்கள் எல்லாம் போடப்பட்டு இருக்கின்றன. பிளாண்டேஷன் லேபர் ஆக்ட், மெடர்னிடி பெனிபிட் ஆக்ட் போன்ற சட்டங்கள் பின்னால் நிறைவேற்றப்பட்டவை. அதில் கண்டிருக்கும் சலுகைகளுக்கு இந்த மசோதாவும் உயர்த்தப்பட்டிருக்கிறது. சட்டத்தில் போடப்படுகின்ற சலுகைகள் எல்லாம் "**Golden mean**" என்று சொல்வதுபோல, மிகவும் அதிகமான சலுகைகளை கொடுத்து வேலை கிடைக்கின்ற வசதிகள் குறைந்து போகாமலும், வாழ்க்கைக்கு வேண்டியதை குறைத்துக்கொள்ளாமலும், இரண்டு அடிப்படையிலும் வைத்து ஒரு நடுத்தரமான யோசனையாக கொடுக்கப்பட்டிருக்கிறது. இதை கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மற்ற யோசனைகளை எல்லாம் அந்தந்த ஷரத்து வரும்போது பரிசீலனை செய்யலாம்.

ஆனால் நான் சொன்னதுபோல் ஒரு அடிப்படையில் தயாரிக்கப்பட்டிருப்பதால், இப்போது எந்தவிதமான மாறுதலும் செய்வதற்கு இல்லை என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நம்முடைய அனுபவத்தை ஒட்டி, பிற்காலத்தில் ஏதாவது மாறுதல் செய்யவேண்டும் என்றால், அதற்கு நமக்கு எல்லாவிதமான வசதிகளும் இருக்கின்றன. உரிமையும் இருக்கிறது. அப்பொழுது மாறுதல்கள் செய்யலாம். அதிகப்படியான சலுகைகளை புகுத்தி நடைமுறையில் அமல் நடத்த முடியாத ஒரு கஷ்டம் விளைவிக்கக்கூடாது என்ற காரணத்தினாலேயே, பல யோசனைகளை, சலுகைகளை—அதிகமாக கொடுக்கவேண்டும் என்று சொல்லும் யோசனைகளை—ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன் என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். எல்லா அங்கத்தினர்களும் இதை வரவேற்று, பாராட்டியதற்கு நன்றி தெரிவித்துக்கொண்டு, இந்த மசோதாவை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாம் என்றுள்ள என் பிரேரபணையை ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

* MR. SPEAKER: Is the hon. Member Sri Sattanatha Karayalar withdrawing his amendment?

SRI K. SATTANATHA KARAYALAR: I am not pressing it, Sir.

The amendment was, by leave, withdrawn.

MR. SPEAKER : The question is—

"That the Madras Maternity Benefit (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 1 of 1958) be taken into consideration".

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2 and 3 were put and carried.

*Clause 4.*

MR. SPEAKER : Motion moved—

"That clause 4 do stand part of the Bill".

SRI M. JAGANNATHAN : Sir, I move the amendment, namely—

"*For* sub-clause 3, *substitute* :

'(3) it applies to every factory and to all industrial establishments, both in the private and public sectors'."

The amendment was duly seconded.

MR. SPEAKER : கனம் கோதண்டராமன் கொடுத்திருக்கிற திருத்தம் விளங்கவில்லை. இந்த மசோதாவில் இருக்கிற வார்த்தைகளை பிரித்துச் சொன்னதுபோல் இருக்கிறது. இதைப்பற்றி விரிவாக சொல்ல வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மசோதாவில் ஒரு வாக்கியமாக இருக்கிறது. இரண்டு வாக்கியங்களாக பிரித்துக் கொடுத்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். இதை வாபஸ் வாங்கிக்கொள்கிறீர்களா ?

SRI V. K. KOTHANDARAMAN : I am not moving my amendment, Sir.

THE HON. SRI R. VENKATARAMAN : "பப்ளிக் செக்டார்" "பிரைவேட் செக்டார்" என்பவை சட்ட பூர்வமான வார்த்தைகள் அல்ல. இவைகள் எல்லாம் நடைமுறையில் உபயோகிக்கின்ற வார்த்தைகள். தொழிற்சாலையை யார் நடத்தினாலும், தனியார் நடத்தினாலும், சர்க்கார் நடத்தினாலும் பெண்களுக்கு இந்த வசதிகள் உண்டு. இந்த வசதிகள் இல்லை என்று நினைத்து திருத்தம் கொடுத்திருப்பதாக நினைக்கிறேன், ஆகையால் இதை வாபஸ் பெறும்படி கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Is the hon. Member withdrawing his amendment?

SRI M. JAGANNATHAN : Yes, Sir.

The amendment was by leave withdrawn.

Clause 4 was put and carried.

*Clause 5.*

MR. SPEAKER : Motion moved—

"That clause 5 do stand part of the Bill".

SRI V. K. KOTHANDARAMAN : Sir I move the amendment namely, that—

"In sub-section (*a*) of the proposed section 3, after the words 'such other person' *insert* the word 'also'."

3rd April 1958]



The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : I am unable to accept the amendment, Sir.

MR. SPEAKER : The question is—

"In sub-section (*a*) of the proposed section 3, after the words 'such other person' *insert* the word 'also'."

The amendment was put and lost.

Clause 5 was put and carried.



*Clause 6.*

MR. SPEAKER : Motion moved—

"That clause 6 do stand part of the Bill".

There are a number of amendments of a similar nature. If amendments Nos. 1, 14 to 17, 40 and 41 are moved all the others, I think, will be covered.

SRI S. M. ANNAMALAI : I move the amendment, namely—

"In the proposed new section 5, *for* the words 'at the rate of seventy-five naye paise a day or seven-twelfths of the average', *substitute* the words 'full' and *omit* the words 'whichever is higher'."

The amendment was duly seconded.

SRI M. JAGANNATHAN : I move the amendments, namely—

"(1) In sub-section (1) of the proposed section 5, for the words 'seventy-five naye paise a day or seven-twelfths of the average daily wage' *substitute* the words 'one rupee a day or the full amount of the average daily wage'.

(2) In the *second* proviso under sub-section (1) of the proposed section 5 for the words 'six weeks' *substitute* the words 'eight weeks'.

(3) In the second proviso under sub-section (1) of the proposed section 5 for the words 'thirty-five weeks' *substitute* the words 'twenty-four weeks'.

(4) In Sub-section (2) of the proposed section 5 *for* the words 'the maternity benefit shall be payable only for the days . . . the day of her death', *substitute* the words 'the maximum amount of maternity benefit that she would have got under that sub-section shall be paid to her nominee in one lumpsum'."

The amendments were duly seconded.

Sri V. K. KOTHANDARAMAN : I move the following amendments, namely—

" (1) In sub-section (1) of the proposed section (5)—

(1) *Omit* the words ' of seventy-five naye paise . . . of seven-twelfths '.

(2) *Insert* the words ' and allowance or allowances ' *after* the words ' daily wage '.

(3) *omit* the words ' whichever is higher ' and

(4) *for* the words 'during the ' *substitute* the word ' or '.

(2) In sub-section (2) of the proposed section (5) for the words ' only for the . . . including the day of her death ' *substitute* the words ' for the days she is entitled to under sub-section (1) '."

The amendments were duly seconded.

Mr. SPEAKER : The clause as well as the amendments are before the House for discussion.

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த திருத்தங்கள் எல்லாம், மசோதாவில் கொண்டுவந்திருக்கும் தொகையை அதிகப்படுத்த வேண்டும் என்று கூறுகின்றன. இப்போது சட்டத்தில் இருக்கிற 8 அணாவையே 12 அணாவாக உயர்த்தப்போகிறோம். இதுவே 50 சதவிகிதம் உயர்வு ஆகிறது. கனம் ஜகன்னாதன் அவர்கள் பேசும்போது "இந்தவிதமான உயர்வுகளைக் கொடுத்து பெண்களுக்கு வேலை கிடைக்காமல் போய்விடும்படி மந்திரி பார்த்துக்கொள்ள வேண்டும்" என்று சொன்னார்கள். ஆகையால் இந்த விஷயத்தில் எனக்கு உதவி செய்ய வேண்டும் என்ற முறையில் இதை வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று அவரை கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது உள்ள சட்டத்தில் 6 வாரங்கள் என்று இருக்கிறது. அதை 8 வாரங்களாக உயர்த்தவேண்டும் என்று திருத்தம் கொண்டு வந்திருக்கிறார்கள். மகப்பேறு சகாயம் 12 வாரங்களுக்குத்தான் கொடுக்க வேண்டும் என்று சர்வ தேச தொழிற்சங்க சம்மேளனத்தில் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். நமது ராஜ்யம், இந்தியா என்று தனித்தனியாக அமைத்துக்கொள்ள முடியாது. ஆகையால் இதை அதிகரிக்க வேண்டும் என்பதை ஏற்றுக்கொள்ள முடியாத நிலைமையில் இருக்கிறேன் என்று சொல்லிக்கொள்கிறேன்.

Mr. SPEAKER : Is the hon. Member Sri Annamalai withdrawing his amendment?

Sri S. M. ANNAMALAI : No, Sir. I am pressing the amendment.

Mr. SPEAKER : The question is—

" That in the proposed new section 5 *for* the words ' at the rate of seventy-five naye paise a day or seven-twelfths of the average' *substitute* the words 'full' and *omit* the words ' whichever is higher '."

The amendment was put and lost.

Mr. SPEAKER : Is the hon. Member Sri Jagannathan pressing his amendments?

Sri M. JAGANNATHAN : I am not pressing them.

3rd April 1958]

The amendments were by leave withdrawn.

MR. SPEAKER : Is the hon. Member Sri Kothandaraman withdrawing his amendments?

SRI V. K. KOTHANDARAMAN : No, Sir, I am pressing my amendments.

MR. SPEAKER : The question is—

"In sub-section (1) of the proposed section (5)—

(1) *Omit* the words 'of seventy-five naye paise . . . or seven-twelfths';

(2) *insert* the words 'and allowance or allowances' *after* the words 'daily wage';

(3) *omit* the words 'whichever is higher'; and

(4) *for* the words 'during the' *substitute* the word 'or'."

The amendments were put and lost.

MR. SPEAKER : The question is—

"In sub-section (2) of the proposed section (5) *for* the words 'only for the . . . including the day of her death' *substitute* the words 'for the days she is entitled to under sub-section (1)'."

The amendment was put and lost.

Clause 6 was put and carried.

Clauses 7, 8 and 9 were put and carried.

*Clause* 10.

SRI M. KALYANASUNDARAM : Sir I move— 4–50 p.m.

"In the proposed section 8-F *after* the words 'Maternity benefit' *insert* the words 'and leave of absence'."

Sir, this is a technical amendment and I would request the Hon. Minister to consider this. In the proposed section 8 it is stated that the worker shall be entitled to payment of maternity benefit for a maximum period of one month. In the definition of 'maternity benefit' there is no indication that they will be entitled to leave of absence also. That is why I have stated 'and leave of absence'. This is only a technical amendment moved for the purpose of clarification.

SRI P. S. CHINNADURAI : I second the amendment.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, the provisions of the proposed section 8-F are clear. It provides for maternity benefit in addition to the period of absence allowed under section 5. The period of absence is provided for in section 5 which is twelve weeks on the whole. The clause covers not only post-natal illness but illness which may arise in the course of pregnancy, confinement or premature birth of a child. In all these cases, the benefit which the woman worker will get is leave of absence as provided for under section 5 plus monetary benefit.

That is the intention. If the hon. Members want it may be increased, it is different. As it is, the clause is fairly clear.

SRI M. KALYANASUNDARAM : இதிலே இருக்கும் நிலையிலே ஆறு வாரத்திற்கு மேற்கொண்டும் ஓய்வு உண்டு என்பது ஸ்பஷ்டமாக இல்லை. அப்படியென்றால், பணம் மட்டும்தான் கிடைக்கும். ஓய்வு கிடைக்காதோ என்று சந்தேகம் இருக்கிறது. இது எழுத்துப் பிழையாக இருக்குமோ என்னமோ. லீவும் கூட உண்டு என்ற அர்த்தம் கொடுக்கவில்லை. ஆறு வார ஓய்வுக்கு மேல் பிறகும் அவசியம் ஏற்பட்டால், லீவு எடுக்கலாம் என்று தெளிவாக இல்லை. மெடர்னிடி பெனிபிட் என்று மட்டும் இருந்தால் பணம் மட்டும் கிடைக்கும், ஒரு மாத ஓய்வு கிடைக்காது. ஆகவே ஒரு மாத ஓய்வு என்பது விடப்பட்டிருக்கிறது என்பது என் அபிப்பிராயம்.

MR. SPEAKER : The question is—

"In the proposed section 8-F *after* the words 'Maternity benefit' *insert* the words 'and leave of absence'."

The amendment was put and lost.

MR. SPEAKER : I believe Mr. Kalyanasundaram is not moving his other amendments.

SRI M. KALYANASUNDARAM : No, Sir.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"In the proposed new section 8-A *for* the word 'ten' *substitute* the word 'fifty'."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"In the proposed new section 8-B *for* the words 'fifteen minutes' *substitute* the words 'half an hour'."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"In sub-section (2) of the proposed new section 8-D *for* the word 'without', *substitute* the words 'with half'."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"In the proposed new section 8-F *after* the word 'month' in line 1 of page 56, *add* the words 'with full daily wages' and *omit* the words 'and at the rate of seventy-five naye paise a day or seven-twelfths of the average daily wage, whichever is higher."

The amendment was duly seconded.

SRI M. JAGANNATHAN : Sir I move—

"In the explanation under the proposed section 8-B *for* the words 'of such age' *substitute* the words 'not exceeding four years of age'."

The amendment was duly seconded.

3rd April 1958]

SRI M. JAGANNATHAN : Sir, I move—

" In the proposed section 8-C *for* the words ' six weeks ' *substitute* the words ' eight weeks '."

The amendment was duly seconded.

SRI M. JAGANNATHAN : Sir I move—

" In sub-section (1) of the proposed section 8-D *for* the words ' three weeks ' *substitute* the words ' eight weeks '."

The amendment was duly seconded.

SRI M. JAGANNATHAN : Sir I move—

" In sub-section (2) of the proposed section 8-D *for* the words ' one month ' *substitute* the words ' two months '."

The amendment was duly seconded.

SRI M. JAGANNATHAN : Sir I move—

" In the proposed section 8-F *for* the words ' seventy-five naye paise ' *substitute* the words ' one rupee '."

The amendment was duly seconded.

SRI M. JAGANNATHAN : Sir I move—

" In the proposed section 8-F, *for* the words ' seven-twelfths ' *substitute* the words ' the full amount '."

The amendment was duly seconded.

SRI T. S. RAMASWAMY PILLAI : Sir, I move—

" In the explanation under the proposed section 8-B *for* the words ' of such age and for such period as may be prescribed ' *substitute* the words ' not exceeding three years of age '."

The amendment was duly seconded.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" In the new section 8-D *for* the word ' three ' *substitute* the word ' twelve '."

The amendment was duly seconded.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

" In the new section 8-F *omit* the words ' and at the rate . . . whichever is higher '."

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : I oppose the amendments.

MR. SPEAKER : I shall put the amendments to vote.

All the amendments were put one by one and lost.

Clause 10 was put and carried.

Clause 11 was put and carried.

*Clause* 12.

SRI M. JAGANNATHAN : Sir, I move—
" *Omit* the proposed section 9-B ".

SRI T. S. RAMASWAMY PILLAI : I second the amendment.

THE HON. SRI R. VENKATARAMAN : This is only a permissive power which is necessary. I oppose the amendment.

MR. SPEAKER : The question is—
" *Omit* the proposed section 9-B ".

The amendment was put and lost.

Clause 12 was put and carried.

Clauses 13 to 16 were put and carried.

*Clause* 1.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—
" In sub-clause (2) of clause 1 *for* the words ' on such date as the State . . . appoint ' *substitute* the words ' at once '."

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : We have to frame rules and all that.

MR. SPEAKER : The question is—
" In sub-clause (2) of clause 1 *for* the words ' on such date as the State . . . appoint ' *substitute* the words 'at once '."

The amendment was put and lost.

Clause 1 was put and carried.

The Preamble was put and carried.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—
" That the Madras Maternity Benefit (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 1 of 1958) as passed by the Council be passed."

MR. SPEAKER : The question is—
" That the Madras Maternity Benefit (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 1 of 1958) as passed by the Council be passed."

The motion was put and carried and the Bill was passed.